(இ-ள்.) என்ன புண்ணியமோ செய்தேன் = எப்படிப் பட்ட (உத்கிருஷ்டமான) புண்ணியங்களை (யான்) செய்தேனோ—எது பாக்கியமோ = யாது அதிர்ஷ்டமோ— காணேன் = யானறியேன்— நன்னிலந்தனில் எழுந்த = நன்னிலமென்னும் மதுவனத்தில்(அருளே உருவமாய்) எழுந்தருளிய—நாரணன் கிருபையாலே = நாராயண தேசிகருடைய (பெருங்) கருணையினாலே—நான் தன்னியன் ஆனேன் = நான் கிருதார்த்தனானேன்— உத்தரீயத்தை வீசுகின்றேன் = ஏகாசத்தை ஆகாசத்திலெறிந்து விளையாடுகின்றேன் — தன்னியன் நான் = கிருதார்த்தனான யான்—இன்னும் தாண்டவம் ஆடுகின்றேன் = மேலும் ஆநந்தக் கூத்தாடுகின்றேன்—எ-று. (175)

[குருவைவியந்து துதித்தல்.]

தத்துவ ஞானம் வந்த சந்தோட வதிச யத்தால்
நித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த
சத்திய மதனா லன்றோ தாண்டவா வென்ற ழைத்தார்
அத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே. (176)

(இ-ள்.) தத்துவ ஞானம் வந்த = (சகலவநர்த்தங்களையு மொழித்து நிரதிசயாநந்தத்தை நேரே பயக்கவல்ல) தத்துவ ஞானத்தா லுண்டான-சந்தோட அதிசயத்தால் = வித்தியாநந்த மேலீட்டால்— நித்தம் ஆடுவன்காண் என்ற நிலை = நாடோறும் (இவ்வாறுநந்த) நடனஞ்செய்யாநிற்பனென்னும் நிர்ணயத்தை—முன்னமே அறிந்த = திருவடியை யடைந்தவன்றே திருவுளத்தின்கண்ணே யுணர்ந்த-சத்தியம் அதனால் அன்றோ = உண்மையான சர்வஞ்ஞத்வத்தாலல்லவா — தாண்டவா என்று அழைத்தார் = தாண்டவாவென்று (காரண) நாமமிட்டு விளித்தனர்; —(ஆகலின்,) அத்தனை மகிமை உள்ளோர்தாமே = அவ்வளவு மகிமையுள்ள வெனது குருவே—அன்னையும் பிதாவும் = (எனக்குத்)தாயுந் தந்தையுமாம்.—எ-று.

"இந்தவி டும்பையு டம்புறு மேது
தந்தையெ னப்புகழ் கின்றிலர் தக்கோ



ரந்தமி லாதவ கண்டமு நம்முட்
டந்தவர் தந்தையெ னச்சமை வுற்றார்."

என்று பிரமகீதையிற் கூறியிருப்பதால், இவரும் "அன்னையும் பிதாவும்" என்று குருவையே கூறினர் எனக்கொள்க. அன்றியும்,

"தந்தை தாயுமெய்த் தகையுடை யுறவும்"

என்னுஞ் செய்யுளானுமறிக. "தாண்டவராயன்" என்னுந் திருநாமம் குருவினுல் இடப்பட்டது. (176)

[இன்னும் குருசாஸ்திராதிகளைப் புகழ்ந்து வணங்குதல்.]

வந்ததோ ரிவ்வா நந்த மகிழ்ச்சியா ருடன்சொல்
வேன்யான், சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா
நிறைந்து தேங்கி, அந்தமில் லாத தாயிற் றப்படிக் குரு
வே தாந்த, மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னே
னே.

(இ-ள்.) வந்தது ஓர் இவ்வாநந்த மகிழ்ச்சி = (பிரஹ்ம வித்தையால்) உண்டானதான ஒப்பற்ற இவ் வித்தியாநந்தத்தின் மகிழ்ச்சியை—ஆருடன் சொல்வேன் யான் = யான்யாவரோடு கூறுவேன்—சிந்தையில் எழுந்து பொங்கி = புத்திவிருத்தியின்கணுதயமாகி மேலிட்டு—செகம் எலாம் நிறைந்து தேங்கி = செகத்தனைத்தினும் வியாபித்துப் பூரணமாய் — அந்தம் இல்லாதது ஆயிற்று = கரையிறந்ததாயினது — அப்படி (அருளும்) = அப்படி (ப்பட்ட வித்தியாநந்தத்தை) அருளாநிற்கும்-குரு = பிரஹ்மநிஷ்டரையும் — வேதாந்த மந்திரம் = வேதாந்த வாக்கியங்களையும்—அருளும் ஈசன்—(குருரூபமாகவும், வேதாந்த வாக்கியரூபமாகவும் இருந்து) அருளாநிற்கும் (சர்வஞ்ஞசிகாமணியாகிய) ஈசுரனுடைய—மலர் அடி வணங்கினேன் = மலர்போலுந் திருவடியையும் பணிந்தேன்—எ-று. (177)

(308) [சொல்லிவந்த வித்தியாநந்தத்தை முடிப்பதோடு நூற்பயன்கூறல்.]

வித்தியா நந்த மிந்த விதமென விளம்பி னேமே
பத்தியா லிந்த நூலைப் பார்த்தநு பவித்த பேர்கள்
நித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந்தி ருந்த முனிவர ராகு வாரே. (178)

(இ-ள்.) வித்தியாநந்தம் இந்தவிதம் என விளம்பினேம்=தத்துவஞான (த்தால் ஆவிர்ப்பவியாநின்ற) ஆநந்தம் இந்தப்படி (துக்காபாவம், சர்வகாமாப்தி, கிருதகிருத்தியம், பிராப்தப்பிராப்பியம்) என (நான்குவகைத்தா மென்று) கூறினேம்—பத்தியால் இந்தநூலைப் பார்த்து=விசுவாசத்தோடு (கூடிப் பிரஹ்மநிஷ்டரான குருவையடைந்து அவர் முகத்தினுல்) இந்நூலை (க்கேட்டு) விசாரித்து-அநுபவித்த பேர்கள்=(இந்நூலின் விடயமான பிரஹ்மான்மவைக்கியத்தை இதிற் கூறியபடியே)அநுபவித்தோர்கள்—நித்திய தரும நிட்டை நிலைதனை அறிந்து=நித்தியமான புண்ணிய விசேஷத்தையுடைய சமாதியின் ஆரூடத்தை அநுபவித்து—சீவன் முத்தியை அடைந்து இருந்த=சீவன் முத்தியையடைந்து (பூர்வம்) இருந்த—முனிவரர் ஆகுவாரே= *முனிவரர் நிகராவர்—எ-று.

இங்கே, "தருமம்" என்றது, தனது*விலாசத்தோடுகூட அவித்தையை நிவிர்த்தித்தற்கு நேரே காரணமான சாட்சாத்காரத்திற்குப் பிரதிபந்தங்களான மல விட்சேபதோடங்களை நிவிர்த்திப்பிப்பதுவாயிலாகச் சாதன பூதமான புண்ணியவிசேஷத்தை.(178)

(309) [குருவின் ஆக்ஞாபலங்கொண்டு இப்பிரபந்தம் முற்றுவித்தேனெனல்.]

ஆரணப் பொருளாம் வித்தி யாநந்தம் விளங்க வேதும்
காரணங் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தில்
நாரண குருந மக்கு நவின்றனர் யோகில் வந்தே. (179)

* முனி=மனனசீலர், வரர்=சிரேஷ்டர், இவர் சுகர், நாரதர் முதலியோர்.

* விலாசம்=காரியசமூகம்.



(இ-ள்.) ஆரணப் பொருள் ஆம்=சுருதியின் பொருளான—வித்தியாநந்தம் விளங்க= (சாதனசதுஷ்டயமுதல்) வித்தியாநந்த பரியந்தம் (அதிகாரிக்கு நன்கு) விளங்க—காரணம் ஏதும் குறைவு இலாமல்= (எடுத்துக் கூறவேண்டுங்) காரணங்களுள், யாதொன்றுங் குறைவுபடாமல்-கைவல்ய நவநீதத்தை=கைவல்யநவநீத (மென்னுநாமமுடைய இப்பிரபந்த) த்தை—பூரணம் ஆக்கவேண்டி = சம்பூரணமாக்கி உலகுக்களித்தற் பொருட்டு (க்கருணைகூர்ந்து) —பூர்வம் ஆம் நன்னிலத்தில்=பழமையாகிய நன்னிலமென்னும் ஸ்தலத்தின்கண்—நாரண குரு=நாராயண (ரென்னுந் திருநாமமுடைய) குருவரன் — நமக்கு — யோகில் வந்து=தியான (ம்பண்ணுங்) காலையில் ஆவிர்ப்பவித்து—நவின்றனர்=ஆக்ஞாபித்தனர்.—எ-று.

இங்ஙனங் கூறினது கொண்டு கல்வி, கேள்விகளானுளதாகிய எனது புத்திவலிகொண்டு இந்நூல் கூறினனல்லன் என அவையடக்கங் கூறினவாறுமாயிற்று. (179)

(310) [அநேக ஞானசாஸ்திரப் பொருள்களையும் இந்நூல் ஒன்றாலேயே அறியலாதுமெனத் திருஷ்டாந்த முகத்தாற் கூறுகின்றார்.]

குலவுசற் குருவின் பாதக் குளிர்புனற் றலைமேற்
கொண்டால், உலகினிற் றீர்த்த மெல்லா முற்றபே
றடைவார் போல, நலமையா குங்கை வல்ய நவநீத
நூலைக் கற்றோர், பலகலை ஞான நூல்கள் படித்தஞா
னிகளாய் வாழ்வார். (180)

(இ-ள்.) குலவு சற்குருவின்= (அகண்டைகரசப் பிரஹ்ம சொரூபமாய்ப்) பிரகாசியாநிற்குஞ் சற்குருவினுடைய —பாதக் குளிர் புனல்=(சீர்)பாத (த்தில் அபிஷேகஞ் செய்த) சீதளதீர்த்தத்தை—தலைமேல் கொண்டால்=சிரசின்மீது (புரோட்சித்துக்) கொள்ளில்—(அப்படிக்கொண்டவர்) உலகினில் தீர்த்தம் எல்லாம் உற்ற பேறு=உலகின்கணுள்ள; (கங்கை முதலிய புண்ணிய) தீர்த்தங்களனைத்திலும் (சென்று ஸ்நாநஞ்செய்தோர்) பெற்ற பேறனைத்தும் — அடைவார்போல = (எப்படிப்) பெறுவாரோ

அதுபோல-நலமை ஆகும்=(அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப்பிராப்தி ரூபமான) பயனைக்கொடுப்பதாகிய—கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்=கைவல்ய நவநீத (மென்னுநாமமுடைய இந்)நூலைக் கற்றோர்கள்—பலகலை ஞான நூல்கள்=பலகலைகளாகிய ஞான நூல்களனைத்தையும்—படித்த ஞானிகள் ஆய் வாழ்வார்=கற்றுணர்ந்த ஞானிகட்கொப்பாய் வாழ்வார்கள்.—எ-று.

இங்ஙனங் கூறினமையின், உலகில் தீர்த்தங்களோ அநந்தம்; அவ்வநந்ததீர்த்தத்திலும் ஆடி அவைகளால்வரும் பேறடைதல் யாவர்க்கும் அரிது: குருபாதோதகந் தலைமேற் கொள்ளப்பெறில், அவ் வளவிறந்த தீர்த்தப்பேறும் பெறுத லெளிதாவதுபோல, அளவிறந்த ஞான நூல்களையு மாராய்ந்து அவற்றின் பொருள்களை யறிதல் யாவர்க்குமரிது இக் கைவல்ய ஞான நூலினைக் கற்கப்பெறில், அளவிறந்த ஞானநூற் பொருள்களனைத்தையும் இதனாற்பெறுதல் யாவர்க்கு மெளிதாகும். ஆகலின், சிஞ்ஞாசையுடையோர் வேதாந்தத்தின் சூத்திரரூபமான இந்நூலை அவசியங் கற்கவேண்டுமென்பது கருத்து. (180)

சந்தேகந் தெளிதற் படலம் முற்றிற்று.

---

ஆக, படலம் 2-க்கு, செய்யுள்–288.

கைவல்லிய நவநீதமூலமும் தத்துவார்த்த தீபவுரையும்

முற்றின.

---



"அறிவுக்கு மறிவு செய்யும்" என்னும் தத்துவ விளக்கப் படலத்தின் 74-வது செய்யுளின் உரையில், 124-வது பிரசங்கத்தின் ஈற்றில் அடியில்வரும் விஷயங்களைச் சேர்த்துப் படித்துக் கொள்க. இவ்வளவு விஷயங்கள் விருத்திப் பிரபாகரகிரந்தத்தில் இருக்கின்றமையின் இவையின்றி முழுவிஷயமும் உணரப்படாமையின் ஜிஞ்ஞாசையுடையோருக் குபயோகமாம் பொருட்டு ஈண்டு ஈற்றில் சேர்த்து அச்சிட்டிருக்கிறோம்.

விருத்திப்பிரபாகரம் 168-வது பிரசங்கத்தின் தொடர்ச்சி:–

(1) பிறிதாற்பிராமாணியங்கோள்ளும்வாதம்

அது அவர்களது அவிவேகத்தைக் காரணமாக வுடைய பிரலாபமாம்: இவ்வாற்றால், நியாய மதத்தில் எந்த ஞானமும், சொப்பிரகாச மன்று. ஆதலால், ஞாநத்தின் ஞாநம் எதனால் உண்டாகின்றதோ, அது ஞாநத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி எனப்படுகின்றது. அநுவியவசாய ஞாநத்தின் சாமக்கிரி மநசையோக முதலியனவும்,ஞாந லக்ஷண அலௌகிக சம்பந்தமுமாம். அது அநுவியவசாய பேதத்தால் நாநாவாம், அங்ஙனமே, "ஜல ஞாநம் பிரமை" என்னும், அநுமிதியும் ஞாநத்தின் ஞாநமாம். அதனை உண்டு பண்ணுவது அநுமாநமாம். அதுவும், ஞாநத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியாம். அதனால், ஜல ஞாநத்தினது பிரமாத்தன்மையின் ஞாநம் உண்டாகிறது. "ஜலத்தைப் *பிரமிக்கின்றே" னென்னும் அநுவியவசாயத்தின் சாமக்கிரியும் ஞாநத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியாம். அதனாலும் ஜல ஞாநத்தினது பிரமாத்தன்மையின் ஞாநமுண்டாகின்றது. ஆனால், "ஜலத்தை யான் அறிகின்றே" னென்னும், அநுவியவசாயமும், ஜல ஞாநத்தின் ஞாநமாம். அது ஜல ஞாநத்தின் பிரமாத்தன்மையினைப் பிரகாசிப்பிக்கிறதில்லை. ஆதலால், ஞாநத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியான கூறிய அநுவியவசாய சாமக்கிரியினால் ஜல ஞாநத்தினது பிரமாத்தன்மையின் கிரகணமின்மை யிருத்தலின், ஜல ஞாநத்தைக்கிரகிக்கும் சகல சாமக்கிரியினாலும், ஜல ஞாநத்தினது பிரமாத்தன்மையின் கிரகணம் உண்டாகாமையால், தன்னாற் பிராமாணியக்கிரகணம் உண்

---

* பிரமிக்கின்றேன்=நன்கு அறிகின்றேன்.

டாகிறதில்லை. ஆனால், பிறிதாற் பிராமாணியக்கிரகணம் உண்டாகின்றது. யாது யாது ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரியோ, அவ் வெல்லாவற்றாலும் பிரமாத்தன்மையைக் கிரகித்தல் உண்டாகின்றது. இதனைத் தன்னாற் பிராமாணியக்கிரகண மென்பர். இப் பக்ஷத்தில் பிரமாத்தன்மைத் தர்மத்தினை *விட்டு எந்த ஞானத்தின் ஞானமு முண்டாகிறதில்லை. பிரமாத்தன்மை ஞானத் தன்மை என்னும் இரண்டு தர்ம விசிஷ்ட ஞானத்தின் ஞானம் உண்டாகின்றது, கேவல ஞானத்தன்மைத் தர்ம விசிஷ்ட ஞானத்தின்ஞான முண்டாகிறதில்லை. பிறிதாற் பிராமாணியக் கிரகண வாதத்தில் முதல் அநுவியவசாயத்தினால் பிரமாத்தன்மையை விட்டு ஞானத்தன்மை விசிஷ்ட ஞானத்தின் ஞான முண்டாகின்றது. மீண்டும், வேறு அநுவியவசாயத்தினாலேனும், அல்லது, முற் கூறிய அநுமானத்தினாலேனும், பிரமாத்தன்மையின் ஞான முண்டாகின்றது.

(2) மீமாம்ஸக மதத்திலும், சித்தாந்த மதத்திலும், கோணுள்ள தன்னாற் பிராமாணிய வாதத்தில் தோஷம்.

மீமாம்ஸக மதத்திலும், சித்தாந்த மதத்திலும், தன்னாற் பிராமாணியக்கிரகணம் அங்கீகாரமாம். நியாய வைசேஷிக மதத்தில் பிறிதாற் பிராமாணியக்கிரகணத்தின் அங்கீகார முண்டு. தன்னாற் பிராமாணியக்கிரகணத்தில் இத் தோஷங் கூறப்பட்டிருக்கின்றது:— யாண்டு ஒரு பதார்த்தத்திற்கு அநேக முறை ஞான முண்டாய்ப் பிரவிருத்தி உண்டா யிருந்திருக்குமோ, ஆண்டு, ஞானத்தின் பிரமாத்தன்மையில் ஓரிடத்தும் சந்தேக மில்லை. ஏனெனின்:—அநேக முறை ஸபலப் பிரவிருத்தி உண்டாய்ப் பிரமாத்தன்மை நிச்சயம் உண்டாய் விடுகின்றது. அந்தப் பிரமாத்தன்மை நிச்சயம் பிரமாத்தன்மையின் சம்சயத்திற்கு விரோதியாம். ஆனால், எப் பதார்த்தத்தின் அபூர்வ ஞானமுண்டாகின்றதோ, அதன் ஞானத்தில் பிரமாத்தன்மையின் சந்தேக முண்டாகின்றது. அஃது உண்டாக லாகாது. ஏனெனின்:— அத்வைத மதத்திலும், பிரபாகரரது மதத்திலுமோ, ஞானம் சொப்பிரகாசமாம். ஆதலால், ஞானம் என்றும் கிரகிக்கப்படாததாகாது; கிரகிக்கப்பட்டதே யாகின்றது. ஆதலால், பிரமாத்

* விட்டு=இரகியாமல்



தன்மையும் கூடவே கிரகிக்கப்படுவதாயின், நிச்சயிக்கப்பட்ட பதார்த்தத்தின் சந்தேக முண்டாகாது. அதனால், பிரமாத்தன்மையின் சந்தேகம் சம்பவியாது. சித்தாந்த பக்ஷத்திலோ, பிரகாசவடிவ ஞான மிருக்கின்றது. பிரகாச பதார்த்தத்திற்கு ஞானபதார்த்தத்தோடு பேத மில்லை.

(3) பிரபாகரரது மதத்தில் சகல ஞானங்களினாலும் திரிபுடி பிரகாசித்தல்.

பிரபாகரரது மதத்தில் விஷயத்தில் ஞானத்தின் பிரகாச முண்டாகின்றது. பிரகாசத்திற் கேது ஞானம். எங்ஙனம்? கடத்தின் ஞான முண்டாயின், அப்போது கட ஞானத்தினால் கடத்தின் பிரகாச முண்டாகின்றதோ, அங்ஙனமே, கடத்தின் ஞானம் தனது சொரூபத்தின் பிரகாசஞ் செய்கின்றது, தனது ஆசிரயமாகிய ஆத்மா யாதோ அதனையும் பிரகாசஞ் செய்கின்றது. சகல ஞானங்களும் திரிபுடியைப் பிரகாசிப்பிக்கின்றன. ஞாதா ஞான ஞேயங்களின் சமுதாயம் திரிபுடி எனப்படுகின்றது. இவ்வாற்றால், பிரபாகரரது மதத்தில் தனது சொரூபத்தினையும் ஞானம் விஷயஞ் செய்கின்றது. தனது பிரமாத்தன்மையையும் விஷயம் செய்கின்றது.

(4) முராரி மிசிரர் மதம்.

முராரி மிசிரர் மதத்தில் ஞானத்தின் பிரகாசம் அநுவியவசாயத்தால் உண்டாகின்றது. அந்த ஞானத்தைப் பிரகாசிப்பிக்கும் அநுவியவசாயமே பிரமாத்தன்மையின் பிரகாசமென்று கொள்ளப்பட்டிருக்கின்றது. இதனால், அநுவியவசாயத்திற்குப் பின் பிரமாத்தன்மையின் சந்தேக முண்டாக லாகாது.

(5) பட்டர் சித்தாந்தம்.

அங்ஙனமே, பட்டர் சித்தாந்தம் இதுவாம்:— கடமுதலியவற்றினது ஞானத்தின் ஞானம் பிரத்தியக்ஷ வடிவமாகாது, ஏனெனின்:— ஞானகுணம் பிரத்தியக்ஷ யோக்கியமன்று, ஆதலால், ஞானத்தின் ஞானம் அநுமிதி வடிவ மாகின்றது; மானஸப் பிரத்தியக்ஷ வடிவ மன்று. அவ் வநுமிதி ஞானம் இவ்வாற்றால் உண்டாகின்றது:—, இந்திரிய விஷயங்களின் சையோகத்தால் பிரத்தி

யக்ஷ ஞானம் உண்டாகுக; அல்லது, அநுமிதி ஞான முண்டாகுக.
சகல ஞானங்களினுலும் கடமுதலிய விஷயங்களில் ஞாதத்
தன்மை யென்னும் தர்மம் உற்பத்தியாகின்றது. இதனுற்ருன்
ஞான முண்டாகிய பின் "அறியப்பட்டது கடம்" என்னும் வியவ
கார முண்டாகின்றது. ஞானத்திற்கு முன் எந்தக் கட இந்திரியங்
களின் சையோக முண்டாகின்றதோ, அதனுல், "இது கட"
மென்னும் பிரத்தியக்ஷ ஞானமுண்டாகின்றது. அந்தப் பிரத்தியக்ஷ
ஞானம் சமவாய சம்பந்தத்தால் ஞாதாவி லிருக்கின்றது; விஷ
யத்தன்மைச் சம்பந்தத்தால் கடத்தி லிருக்கின்றது. யாண்டு
விஷயத்தன்மைச் சம்பந்தத்தினுல் ஞான முண்டாகின்றதோ,
ஆண்டுச் சமவாய சம்பந்தத்தினுல் ஞாதத்தன்மை உற்பத்தி
யாகின்றது. இவ்வாற்ருல், கடத்தின் ஞானத்தினுல் கடத்தில்
ஞாதத்தன்மை உற்பத்தியாகின்றது. அந்த ஞாதத்தன்மைக்கு
உபாதான காரணம் கடமும், நிமித்த காரணம் ஞானமுமாம்;
அசமவாயி காரண பரிபாஷை பட்டர் மதத்தில் இல்லை. உபா
தான காரணத்திற்கு வேருகியதை நிமித்த காரண மென்றே
கூறுவர். இவ்வாற்ருல், ஞான ஜந்நிய ஞாதத்தன்மைத் தர்மம்
கடத்தில் உண்டாகின்றது. முதலிலோ, "இது கட"மென்பதாகக்
கடத்தைப் பிரகாசிப்பிக்கும் பிரத்தியக்ஷ முண்டாயிருக்கின்றது.
அந்தப் பிரத்தியக்ஷத்தினுல் கடத்தில் ஞாதத்தன்மைத் தர்மம்
உண்டாயிற்று: அப்போது இந்திரிய சையோகத்தினுல் அதே
கடத்தின் ஞாதத்தன்மையின் பிரத்தியக்ஷம் "அறியப்பட்டது
கட" மென்பதாக உண்டாகின்றது. இவ்வாற்ருல், ஞான ஜந்நிய
ஞாதத்தன்மையின் பிரத்தியக்ஷம் புற இந்திரியத்தினுல் உண்டா
கின்றது. புறப் பதார்த்தங்களினது ஞானத்தின் பிரத்தியக்ஷம்
புற இந்திரியங்களினுலோ, எம் மதத்திலும் உண்டாகிறதில்லை.
நையாயிகர் முதலியோர் மதத்தில் ஞானத்தின் மானஸப் பிரத்தி
யக்ஷ முண்டாகின்றது. பட்டர் மதத்தில் கட முதலியவற்றினது
ஞானத்தின் மானஸப் பிரத்தியக்ஷமு முண்டாகிறதில்லை; ஆனுல்,
கட முதலிய ஞானத்தின் (அநுமானஜந்நிய) அநுமிதி ஞானம்
உண்டாகின்றது. அநுமானத்திற்கு இது வடிவமாம்:— "இக்
கடம் விஷயத் தன்மைச் சம்பந்தத்தினுல் ஞான முடையதாம்;
சமவாயத்தினுல் ஞாதத்தன்மை யுடைமையால்; யாண்டு யாண்டுச்
சமவாயத்தால் ஞாதத்தன்மை, ஆண்டு ஆண்டு விஷயத்தன்மைச்



சம்பந்தத்தால் ஞான முண்டு." இந்த ஸ்தானத்தில், முன்னிருப்ப
தாகிய கடம் பக்ஷம். விஷயத்தன்மைச் சம்பந்தத்தால் ஞானம்
சாத்தியம். மேல் ஏது திருஷ்டாந்தங்க ளிருக்கின்றன. பிற
நூல்களில் வேறு விதமாக அநுமானம் எழுதப்பட்டிருக்கின்றது.
அது கடினமாம். இது சுலபமான கிரமமாய்க் காட்டப்
பட்டது. பட்டர் மதத்தில் அநுமானத்தினுல் ஞானம் அறியப்படு
கின்றது. இவ்வாற்ருல், ஞானத்தைக் கிரகிக்கும் சாமக்கிரி பட்டர்
மதத்தில் அநுமானமாம்.

(6) [நியாய வைசேஷிக மத நிச்சயம்.]

இவ்வநுமானத்தினுலேயே கட ஞானத்தின் பிரமாத்தன்
மையின் ஞானமு முண்டாகின்றது. ஆதலால், ஞானத்தின் அநு
மிதி உண்டாகிய பின், பிரமாத்தன்மையின் சந்தேகம் பட்டர்
மதத்தில் உண்டாக லாகாது. ஆதலால், ஞானத்தின் சகல ஞானங்
களினுலும், பிரமாத்தன்மையின் நிச்சயம் உண்டாகிறதில்லை;
ஆனுல், ஸபலப் பிரவிருத்தி உண்டாகிய பின் ஞானத்தினது
பிரமாத்தன்மையின் நிச்சயம் அநுமானத்தினுல் உண்டாகின்றது.
இது நியாயவைசேஷிகர் மதம். இதனைப் பிறதாற் பிராமாணிய
வாத மென்பர். ஞானத்தினது உற்பத்தியின் சாமக்கிரியினுல்
பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாகிறதில்லை. அதிக சாமக்
கிரியினுல் பிரமாத்தன்மையின் உற்பத்தி உண்டாகின்றது. அங்ங
னமே, அதிக சாமக்கிரியினுல் பிரமாத்தன்மையின் ஞானம்
உண்டாகின்றது. பிரமாத்தன்மையினைப் போல அப்பிரமாத்
தன்மையின் உற்பத்தி பிறிதான் உண்டாகின்றது. பிறிதான்
உண்டாகாமல் ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினுல்
ஞானத்தினது அப்பிரமாத்தன்மைத் தர்மத்தின் உற்பத்தி
உண்டாயின், சகல ஞானங்களும் அப்பிரமை யாதல் வேண்டும்.
ஆதலால், ஞானத்தை உண்டுபண்ணும் சாமக்கிரியினுல் அப்பிர
மாத்தன்மையின் உற்பத்தி உண்டாகிறதில்லை. ஞானத்தை
உண்டுபண்ணுவன இந்திரிய அநுமானாதிகளாம். அவற்றில்,
தோஷத்தின் சகாய மிருக்குமாயின், அப்பிரமாத்தன்மை
யோடு கூடிய ஞானத்தின் உற்பத்தி உண்டாகும். தோஷம்
நானா வித மாம்.

பிரத்தியக்ஷப் பிரம(ஜ்ஞ)ம் உண்டாயின், ஆண்டோ, நேத்
திர முதலியவற்றின்கண் உள்ள பிரமாண தோஷத்தினைப் போல,
விஷயத்தின்கண் உள்ள சாதிருசிய தோஷமும், ஏதுவாம்.
சிலவிடத்துப் பிரத்தியக்ஷப் பிரம(ஜ்ஞ)த்தில் விஷயத்தின்கண்
உள்ளசாதிருசிய தோஷத்தின் வியபிசாரமு மிருக்கின்றது ஆனல்,
சதிருசத் (சமாந முடைய) தின்கண்ணே வெகு பிரம(ஜ்ஞ)ம்
உண்டாகின்றது. ஆதலால், அநேக இடங்களிலோ, சாதிருசிய
தோஷம் பிரம(ஜ்ஞ)த்திற்கு ஏதுவாம். யாண்டுவேற் றியல்
புடைய தன்கண் பிரம(ஜ்ஞ)ம் அநுபவசித்த மாகின்றதோ,
ஆண்டுச் சாதிருசிய தோஷம் பிரம(ஜ்ஞ)த்திற்குக் காரணமன்று.
ஏக வடிவத்தால் தோஷம் ஏதுவன்று. ஆனல், எது இருக்க எந்தப்
பிரம(ஜ்ஞ)ம் உண்டாகின்றதோ, அந்தத் தோஷம் அந்தப்பிரம
(ஜ்ஞ)த்திற்குக் காரணமாகின்றது. பரோக்ஷப் பிரம(ஜ்ஞ)
ஞாநத்தில் சாதிருசியதோஷத்தின் அபேக்ஷை யில்லை. இது அநு
பவ சித்தமாம். ஆதலால், பரோக்ஷ ஞாநத்தில் விஷயத்தின்கண்
உள்ள தோஷம் ஏது வன்று. ஆனல், அநுமிதிப் பிரம(ஜ்ஞ)த்தில்
அநுமாந தோஷம் ஏதுவாம். வியாப்பியமாகிய ஏதுவின் ஞாநம்
அநுமாநமாம். ஏதுவில் வியபிசார முதலிய தோஷம் நியாய
கிரந்தங்களிற் பிரசித்தமாம். சாப்தப் பிரம(ஜ்ஞ) முண்டாயின்,
ஆண்டுச் சுரோதாவினிடத்து வாக்கிய தாற்பரியத்தின் அவ
தாரண மின்மை தோஷமாம். சொல்லுவோனிடத்து விப்பிரலம்ப
கத்தன்மை (வஞ்சகத் தன்மை) முதலியன தோஷமாம்.
சப்தத்தில் பிறிதோர் விதத்தால் போதிக்குந்தன்மை முதலியன
தோஷமாம். இவ்வாறு அப்பிரமாத் தன்மைக்கு ஏதுவாகிய
தோஷத்தை அநுபவ அநுசாரமாக அறியவேண்டும்.

இப் பிரசங்கத்தில், பிரமாத்தன்மையின் உற்பத்தியும்,
அப்பிரமாத்தன்மையின் உற்பத்தியும் சொல்லப்பட்டன. அது
விருத்தமாகத் தோன்றுகின்றது. சென்றன, வருவன, இருப்பன
வாகிய சகலப் பிரமைகளிலும், பிரமாத்தன்மைத் தர்மம் ஏக
மாம். அங்ஙனமே, சகல அப்பிரமையிலும் அப்பிரமாத்தன்
மையும் ஏகமாம். அவற்றின் உற்பத்தி கூறுதல் சம்பவியாது;
என்றாலும், தனது காரணத்தினுல் ஞாநம் உற்பத்தியாயின்,
அப்போது சில ஞாநம் பிரமையும் சில ஞாநம் அப்பிரமையு



மாகின்றன. பிரமாத்தன்மை விசிஷ்டம் பிரமையாம். அப்பிர
மாத்தன்மை விசிஷ்டம் அப்பிரமையாம். இவ்வாற்றுல், ஞாநத்தில்
விலக்ஷணமான பிரமாத்தன்மை அப்பிரமாத்தன்மைத் தர்மங்கள்
ஞாநத்தை யுண்டுபண்ணும் சாமக்கிரியின் அதீநமாம். சில
விடத்து ஞாநத்தின் இத்தன்மைய சாமக்கிரி இருக்கின்றது.
அதாவது:—பிரமாத்தன்மை விசிஷ்ட ஞாநத்தின் உற்பத்தி
எதனுல் உண்டாகின்றதோ, அத்தன்மையசாமக்கிரி இருக்
கின்றது. சிலவிடத்து அப்பிரமாத்தன்மை விசிஷ்ட ஞாநத்தின்
உற்பத்தி எதனுல் உண்டாகின்றதோ, அத்தன்மைய சாமக்கிரி
இருக்கின்றது. இதனுல், இவ்வாறு மதித்தல் வேண்டும்:—

பிரமாத்தன்மைத் தர்மமோ ஒன்றும். சகலப் பிரமை (1)
யிலும் அதன் சம்பந்த மிருக்கின்றது. ஆனல், பிரமாத்தன்மை
யின் சம்பந்தம் சாமக்கிரியின் அதீநமாம். இவ்வாற்றுல்,
ஞாநத்தில்பிரமாத்தன்மையின் பிரயோஜக(காரண)மாய், சாமக்
கிரி இருத்தலால், பிரமாத்தன்மையின் உற்பத்தி சொல்லப்பட் (2)
டிருக்கின்றது. அங்ஙனமே, அப்பிரமாத்தன்மையின் பிரயோஜ
கம் தோஷமாம். ஆதலால், தோஷஜந்நியம் அப்பிரமாத்தன்மை
எனப்படுகின்றது. தோஷஜந்நிய மென்று சொல்லுதற்குத்
தோஷப் *பிரயோஜ்ஜியத்தில் தாற்பரியமாம். அவற்றில் (3)
ஞாநத்திற்கோ முக்கிய உற்பத்தியே சம்பவிக்கின்றது.

சித்தாந்தத்தில் சாக்ஷி பாஸியம் பிரமாத்தன்மையாம்.
ஆதலால், பிரமாத்தன்மையினது ஞாநத்திற்கும் உற்பத்தி (4)
கூறின், சாக்ஷியின் உற்பத்தி சித்தமாகின்றது. அது பொருந்
தாது என்றாலும்; விருத்தியில் ஆரூட சாக்ஷி பிரமாத்தன்மை
முதலியவற்றைப் பிரகாசிப்பிக்கின்றது. ஆதலால், விருத்தியும்
ஞாந மெனப்படுகின்றது. அதற்கு உற்பத்தி சம்பவிக்கும். இவ் (5)
வார்த்தை முன் சொல்லப்பட்டிருக்கின்ற தெனினும், முன்
கூறிய பொருளையே கூறுதலால் கேட்பவருக்கும், படிப்பவருக்
கும், போதம் திடமாகின்றது. சாஸ்திரீய அர்த்தத்தின்
மந்த சம்ஸ்காரமுடைய புருஷர்களுக்கு அடிக்கடி சொல்லு
தலால், பிரயாசையின்றிப் போத முண்டாகின்றது. ஆதலால்,

* பிரயோஜ்ஜியம்=காரணத்தாலாகியது.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

இந்நூலாசிரியர் மாணாக்கர், இவ்வாசிரியரையும்,

இந்நூலாலடையும் அநுபூதியையுந் துதித்தல்.

அண்ணறன் னருளி ணுலே யகம்புற மின்றி யொன்ருய்
எண்ணமி லக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் ருண்ட வேசன். (1)

ஆன்ற பதமா மூன்றற்கு மதுநீ யாணு யெனும்பொருளிற்
சான்ற துரியா தீதமெனுந் தடையற் றிலங்கொண் சைதந்நியம்
ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூடறுத்துத்
தோன்றித் தானே தாணுவர் துலங்குந் தமக்கே சுவாநுபவம். (2)

என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தி யானந்தம்
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்றோர்
இன்ன மாணுக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்க டுய முத்த ராகுவரே. (3)

தத்துவ விளக்கத் தாலுஞ் சந்தேகந் தெளித லாலும்
ஒத்திருள் விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கும்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்டான். (4)

ஆண்டதே சிகனு மைய ஞரண னனந்தன் பாதம்
பூண்டவா ரோபத் தான்முன் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளேக்கத் தென்றும்
காண்டிட வைத்த ளித்த காரணு போற்றி போற்றி. (5)

சற்குருவே துணை.

---

இப் பிரகரணத்தில் அநேக அர்த்தங்களைப் பலமுறை கூறி யிருக்கின்றோம்; "கூறியது கூறல்" என்னும் குற்றமில்லை. இவ்வாற்றால், நியாய மதத்தில் பிறிதாற் பிராமாணிய வாதம் அங்கீகரிக்கப்பட்டிருக்கின்றது. தன்னாற் பிராமாணிய வாதத்தில் சம்சயத்தின் அநுபபத்திதோஷம் சொல்லப்பட்டிருக்கின்றது.

### (125) நியாய வைசேஷிக மத கண்டநம்

பிரமாத்தன்மையின் ஞாநத்தையோ பின்சொல்லுவோம். முதலிலோ

160-வது பக்கம் 23-வது வரியில் சேர்த்துப்படித்துக் கொள்க.

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

---

இந்நூலாசிரியர் மாணாக்கர், இவ்வாசிரியரையும், இந்நூலாலடையும் அநுபூதியையுந் துதித்தல்.

அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்றாய்
எண்ணமி லக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் ருண்ட வேசன். (1)

ஆன்ற பதமா மூன்றற்கு மதுநீ யானு யெனும்பொருளிற்
சான்ற துரியா தீதமெனுந் தடையற் றிலங்கொண் சைதந்நியம்
ஊன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்துத் தடையு மூடறுத்துத்
தோன்றித் தானே தானுவர் துலங்குந் தமக்கே சுவாநுபவம். (2)

என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தி யாநந்தம்
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்றோர்
இன்ன மாணாக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்க டுய முத்த ராகுவரே. (3)

தத்துவ விளக்கத் தாலுஞ் சந்தேகந் தெளித லாலும்
ஒத்திருள் விடாத மாயா வுள்ளிரு ளிரிய வோங்கும்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்தி பேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித் தாண்டான். (4)

ஆண்டதே சிகனு மைய னாரண னனந்தன் பாதம்
பூண்டவா ரோபத் தான்முன் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளேக்கத் தென்றும்
காண்டிட வைத்த ளித்த காரணு போற்றி போற்றி. (5)

சற்குருவே துணை.

---

உ

சிவமயம்

# உதாரணஸஹித கைவல்லிய நவநீதச்

## செய்யுளின் தலைப்புக்கவி

---

புத்திவேத நான்பொங்க உகந்தமாண் டன்பர்
பொன்னிவிழை பாரியை நெய்விட்ட புருடன்
இத்திசா வாதுயரில் தன்பவுணர்ந் தொன்று
ஈன்றளவ ருடைவான மாயவன் என்னு
நித்திஉண்டு போல்காட்சி அந்தபடர் முத்த
நித்திய சமந்தசிர சாதனமி மேலாம்
தொத்திஇவ னதிதெருளு ஆனவண அன்ன
தொடர்சொன் அடங்கிவா ராதன்னை அன்னே. (1)

அன்னிஎன் னைஇன்ன தேகநன தால
அத்தியா ரோபஇப் படியதுதான் காலம்
உன்னிஉத் தமசத்து பற்றேது குறியும்
ஒத்தவா ழும்ஒருவ சத்துவகு வான்மு
மன்னிஇக் குணஈசன் அழுக்கேம தோற்ற
மாம்ஆதி இராசதஇவ் வுடல்சூக்கு ஐந்து
மின்னிஇரை தன்தூல சீரிய மரங்கள்
மிகுமகற் பனைவான அரவரும் புன்னே. (2)

புன்னைஎன் னுபடமு தூடணது தானி
பூன்றஆ தாரசக மதிகேவ தோற்றம்
துன்னிமா நுடசுழுத்தி தரைஉறை வாக்கின்
சுத்திஇம் பரிபிண இந்தமா பிரமம்
வென்னிதத் துவஇதுநி அறிபுண்ணி தசபு
விண்பூச்சி விறபிறிவ கரணசத் தொடுசி
என்மூக மாயாதொன் றன்சச்சி பஞ்ச
என்னவா முன்புவிரி தூலஒலி அப்பே. (3)

அப்பியின் னதுதுயின் றறிபேதம் எல்லாம்
அறிவுக்கு வாக்குவாக் குமதர்க்க மதுரம்



தப்பிந்த நீபேதம் வடகங்கை பன்னி
தத்துவ கடதஞ்ச தேகமுதல் அநுப
தப்பைநன அளியைய சிட்டநீ நானென்
தடையக்கி பிரமபா தத்துவளத் தனைநாள்
மிப்பிஎங் குஞ்சுத்தன் ஞானதீர காம
மிகவகுண காண்பேத சென்றபிம் மாவே. (4)

பிம்மைவா னேபின்னை அறைசாற்றி அரிதா
பிரமசீ வன்போற்ற பஞ்சினை பொறுமை
உம்மைஅரி கடமெனும் காலம்அழி சச்சி
ஒண்டபற் றமுஞான அந்தமில் எண்ணில்
நம்மைபுண் அந்தசொல் லியகானல் எந்தை
நரர்நற்க மந்திக்கு சந்ததம் எனவு
தம்மைஊர் மந்திரா கமமற்றை வாக்கி
தன்பபுனி தம்முந்தி உன்னுருக் கம்மே. (5)

கம்எரி விருத்திவஞ் சககருது மனது
களங்கமற் றேகமன சுத்தம்உரை யெனமன்
அம்விவ காகாய வெறிதேக செய்கை
அறுசுமெய் ஆடவர் குரவர்கிளர் மகனே
உம்ஐயா கேள்அணுவின் ஓய்ந்தாலுல் தெரித
உத்தமநல் லவன்ஈசன் எல்லாச்சீ அகமென்
செம்சட்டி இவனயன் தடத்துநரர் முத்தி
சிவகாமி அனகமை யோகஇல மையே. (6)

மையநித் தன்கைத எறிசீவ ஆன
மலஎன்ம அழிவிலா வழிபடு சிறந்த
நையதிகழ் மூவராம் ஈசர்அச் சிந்த
நலமெய்மனை எப்பொருள் பொருதிடம் ஒன்று
தெய்யமடல் இந்தஞா கெடாதமுனி கரணம்
தெரிவபோ னசபத்தி வேடமா றின்ன
கையதுள தர்ப்பணத் திங்குமனை நன்மை
கறைதலைமை உழுதொழில்தீ ராதினமு மயவே. (7)

மயபோக கள்ளுமது அயமக படுத்தி
மகபண்ண திரமாம உலகமா சொரூப
சயதுருத்தி மாஅருளு விருத்திவகு கண்ட
சருவமு பிரமனும் சடஇந்த பிரம

பயவீட திந்தஅன் ஞன்மலடி மாயை
பங்கசொற் பனபிரம பொய்ஈச ஞா
கயமாயை அதனையி அருவமுழு காற்றில்
காரிசத் திசஇல்லை கருப்பைகருப் புனாயே. (8)

புரைஉற்ப ஆர்க்கும்வா யுத்தபிற மேவு
பூரிஞா னம்பொய் அசத்திதா னன்றி
நரைஉருவ தாமஇறு மாந்திசட இகமா
நாசசென் இருளாக சீவனன் றிந்த
தரைகாண்டல் சித்தமத் தன்னவிட வேகின்
தாககெட லானபுலி மானபோ கத்தில்
உரைஇவ்வா றீனந்த தாங்குதவு நெய்யும்
ஒன்றுகி அந்தநிச வாக்கமனு டல்லே. (9)

அல்எவண இந்தவா குககுளிரி நித்தி
அசலஊ றுபஇன்ன நிர்க்குணவ மோக
மெல்சத்தே வீயாத சுருதிபல கசனு
மேனிதன்னி லேஇதய வினவுமிட மூந்த
தொல்உண்டு புலதுற்ச தத்துவமுற் புவிமூ
துரியாவ ஞெருஅருளின் முன்னிலம் நாலாம்
இல்இப்பு பொல்சிட்டர் மந்தமும் பஃவி
இருவசிஞ் ஞாபந்த பிறநானென் கனையே. (10)

கனைநிறை மனத்தந்த வாதஞ விருத்தி
காரணப் படிசித்து நானென்னவு என்ன
குனைதத்து இந்தவிடு வந்தவித்தி யார
குலவண்ணல் ஆன்றபதம் என்னுமா தத்து
எனையாண்ட தேசிகன் பெருமைநூற் பெருமை
யிசைக்குமிவை யைந்தென்ப வெண்பத்தெட் டோடும்
அனையான கைவல்ய இருநூற்றின் பொருளை
யான்றகுரு வாலுணர்வ ராவர்பர சிவமே. (11)

உதாரணஸஹித கைவல்லிய நவநீதச்

செய்யுளின் தலைப்புக்கவி

முற்றிற்று.

---

உ

## கைவல்லிய நவநீதச்செய்யுளின்

## முதற்குறிப்பகராதி

---

கைவல்லிய நவநீதச்செய்யுளின்
முதற்குறிப்பகராதி
முற்றிற்று.

---

## இந்நூலில் வந்துள்ள செய்யுள்வடிவ

### உதாரண நூற்பெயர் அகராதி

| நூற் றேகை | | செய்யுளின் றேகை | நூற் றேகை | | செய்யுளின் றேகை |
|---|---|---|---|---|---|
| 1 | அஞ்ஞவதைப் பரணி | 4 | 19 | தேவாரம் அப்பர் | 2 |
| 2 | அத்துவிதவுண்மை | 1 | 20 | தேவாரம்சம்பந்தர் | 1 |
| 3 | அமிர்தசாரம் | 1 | 21 | நன்னூல் | 1 |
| 4 | ஈசுரகீதை | 7 | 22 | பகவற்கீதை | 19 |
| 5 | கந்தரனுபூதி | 1 | 23 | பஞ்சதசி | 6 |
| 6 | சசிவன்னபோதம் | 1 | 24 | பட்டினத்துப் பிள்ளையார்பாடல் | 1 |
| 7 | சாங்குசித்தர் | 1 | 25 | பாகவதம் | 14 |
| 8 | சுத்தசாதகம் | 1 | 26 | பாடுதுறை | 2 |
| 9 | சுருதி | 1 | 27 | பிரபுலிங்கலீலை | 4 |
| 10 | சுவானுபவத்திரு வாக்கு | 1 | 28 | பிரஹ்மகீதை | 32 |
| 11 | சொரூபானந்த உபநிடதம் | 1 | 29 | பெருந்திரட்டு | 1 |
| 12 | ஸ்மிருதி | 2 | 30 | ரிபுகீதை | 1 |
| 13 | திருக்கழுமல மும் மணிக்கோவை | 1 | 31 | லக்ஷணவிருத்தி | 1 |
| 14 | திருமந்திரம் | 5 | 32 | வள்ளலார் | 1 |
| 15 | திருவள்ளுவர் | 2 | 33 | வாசிட்டம் | 94 |
| 16 | திருவாசகம் | 1 | 34 | விவேகசூடாமணி | 2 |
| 17 | திருவாய்மொழி | 3 | 35 | வேதாந்தசூடா மணி | 9 |
| 18 | திருவிடைமருதூர் மும்மணிக்கோவை | 1 | | ஆக உதாரணச் செய்யுளின் ரேகை | 226 |

## உதாரணநூல், உட்பிரிவுகளின் சுருக்கெழுத்து விபர அகராதி

அக்கை = அக்கைச்சி
அதிரக = அதிரகசியம்
அத் = அத்தியாயம்
அயிந் = அயிந்தவர்கதை
இக்ஷு = இக்ஷுவாகுகதை
இத = இதோபதேசம்
கசன் = கசன்கதை
களங்கா = களங்காட்டல்
கற்கடி = கற்கடிகதை
காதி = காதிகதை
குலாப் = குலாப்பத்து
குறுந் = குறுந்தொகை
கைலா = கைலாயம்
சமாதி = சமாதிக்கிரியை
சன = சனகராசன்கதை
சிகி = சிகித்துவசன்கதை
சிலை = சிலைக்கதை
சுரகு = சுரகுகதை
சொல் = சொல்லதிகாரம்
ஸ்கந் = ஸ்கந்தம்
ஞான = ஞானவிண்மகன்
[கதை
தத்து = தத்துவவிவேகம்
தாசூ = தாசூரன்கதை
தாம = தாமவியாளகடர்கதை
திருவங்க = திருவங்கமாலை
திருவெழு = திருவெழுகூற்
[றிருக்கை

தேவ = தேவபூசைகதை
நின்ம = நின்மலாவத்தை
நீத் = நீத்தார்பெருமை
பகீ = பகீரதன்கதை
பஞ்ச = பஞ்சபூதவிவேகம்
பாலன் = பாலன்கதை
புசு = புசுண்டன்கதை
புண் = புண்ணியபாவனர்
[கதை
பொது = பொதுவியல்
மனத் = மனத்தின்கதை
மனோ = மனோலயகதி
மாவ = மாவலிகதை
மானு = மானுவேடன்கதை
முத்தா = முத்தாயியம்மைகதி
முத்தி = முத்திநிச்சயம்
முமு = முமுக்ஷுப்பிர
[கரணம்
வாழ்க் = வாழ்க்கைப்பாடு
விரத = விரதத்திரயகதை
வீத = வீதகவ்வியன்கதை
வீம = வீமபாசதிடர்கதை
வெஃ = வெஃகாமை
வேதா = வேதாளகதை
வைரா = வைராக்கியப்பிர
[கரணம்

## முதற்குறிப்பகராதி





## முதற்குறிப்பகராதி

## முதற்குறிப்பகராதி





## முதற்குறிப்பகராதி

முதற்குறிப்பகராதி





முதற்குறிப்பகராதி

| பிர காரணம் | கதை | கவி எண் | நாலும் செய்யுளும் | கவித் தோகை | | கைவல் பக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 3 | ஞான | 7 | சத்தியம்பிரமமான் | | ... | 420 |
| 5 | புண் | 38 | சாலமிகுதொழிற் | | ... | 258 |
| 6 | கசன் | 7 | சித்தமாவது | | ... | 250 |
| 4 | தாம | 2 | சீவனுயிருந்துகாணும் | | ... | 412 |
| 5 | இத | 9 | சீவன்முத்தி | | ... | 249 |
| 6 | வேதா | 24 | சூக்கமாயெட்டா | | ... | 413 |
| 6 | இத | 36 | செயலினுரிய | | ... | 99 |
| 6 | இக்ஷ்வா | 64 | ஞானமடைந்த | | ... | 209 |
| 3 | கற்கடி | 38 | தடமானவதன்புறமில் | | ... | 412 |
| 6 | சிகி | 157 | தமையுணர்ந்தோர் | | ... | 248, 255 |
| 4 | தாரு | 12 | தியக்குறுபோகத்தாசை | | ... | 39 |
| 6 | இக்ஷ்வா | 43 | திரணநுனிகள் | | ... | 263 |
| 4 | கசன் | 9 | துன்றுவாதனையே | | ... | 54 |
| 4 | தாரு | 97 | தூயசத்துவங்கொள் | | ... | 240 |
| 5 | சுரகு | 28 | தெரிவதாகிய | | ... | 299 |
| 6 | தேவ | 58 | தேசார்குருநான்மா | | ... | 216 |
| 2 | முமு | 4 | தேசிகனூல்சொல்வழி | | ... | 121 |
| 5 | இத | 52 | தொக்கபிறவித்திரள் | | ... | 185 |
| 5 | வீத | 29 | தொடர்மனமே | | ... | 382 |
| 6 | இத | 52 | தொலைவில்பொருள் | | ... | 124 |
| 6 | இத | 4 | நனவிற்சு | | ... | 177 |
| 4 | கசன் | 7 | நாமுடலென்னுமா | | ... | 132 |
| 6 | சிலை | 4 | நிலன்விண்கால்கிரி | | ... | 415 |
| 3 | ஞான | 11 | பந்தத்துருவங்கேட் | | ... | 54 |
| 3 | இத | 70 | பரமமாமறிவின்முன் | | ... | 26 |
| 4 | தாரு | 102 | பரமமாயுண்டெனல் | | ... | 427 |
| 3 | ஞான | 34 | பராபரமாமப்பொருளை | | ... | 217 |
| 6 | இக்ஷ்வா | 63 | பற்றுமுனிவு | | ... | 208 |
| 6 | புசு | 80 | பன்மைப்பேய் | | ... | 358 |
| 1 | வைரா | 84 | பாரியையுடையோன் | | ... | 6 |
| 3 | அயிந் | 9 | பிரமனுமேசிருட்டியெ | | ... | 326 |
| 5 | காதி | 1 | பிறப்பிறப்பாம்பெயருடைய | | ... | 350 |
| 6 | தேவ | 56 | பெரியமாயைகாரண | | ... | 210 |
| 6 | கசன் | 13 | பொய்யதாமுயற் | | ... | 358 |
| 6 | இக்ஷ்வா | 65 | போற்றவணங்கப் | | ... | 200 |
| 6 | சிகி | 60 | மணியாழியுலகமெல்லாம் | | ... | 277 |



| பிர காரணம் | கதை | கவி எண் | நாலும் செய்யுளும் | கவித் தோகை | | கைவல் பக்கம் |
|---|---|---|---|---|---|---|
| 3 | ஞான | 6 | மண்டியசுழுத்திதன்னி | | ... | 134 |
| 6 | இத | 28 | மறுபூமிக்கிந்த | | ... | 442 |
| 4 | தாம | 18 | மனமணிபேதச்சேற் | | ... | 244 |
| 4 | தாம | 12 | மனமெனும்வினையை | | ... | 405 |
| 1 | வைரா | 109 | மனைவியுமகரும்பொன் | | ... | 4 |
| 3 | இத | 26 | மானதனினைத்தைதம் | | .. | 233 |
| 3 | ஞான | 37 | மிகவருகாமாதிகளாம் | | ... | 191 |
| 3 | பாலன் | 1 | முழுதுசத்தியுமாய் | | ... | 344 |
| 5 | சுரகு | 26 | முனியகன்றபின்னெ | | ... | 299 |
| 3 | இத | 28 | மூகமாய்ச்சடமாய் | | ... | 152 |
| 4 | கசன் | 20 | மேனியிற்புறத்தி | | ... | 428 |
| 4 | தாரு | 19 | யாதினிற்றேன்றிய | | ... | 358 |
| 5 | மாவ | 45 | வருங்கற்பகவிண் | | ... | 121 |
| 1 | வைரா | 11 | வழிபடுமிதனைவிட்டு | | ... | 285 |
| 4 | தாரு | 42 | வானநிகராமனைத்துங் | | ... | 120 |
| 5 | சன | 32 | வானேகுகதிரிரவி | | ... | 195 |
| 4 | தாரு | 53 | வான்முதலாமண்முதலா | | ... | 80 |
| 5 | சுரகு | 40 | வெறிதிருக்கினும் | | ... | 252 |
| | | | (34)விவேகசூடாமணி | 2 | | |
| | | 244 | என்னவாசா | | ... | 154 |
| | | 246 | விரிவகங்காரமாதி | | ... | 155 |
| | | | (35)வேதாந்தசூடாமணி | 9 | | |
| | | 94 | அநுபவித்தல் | | ... | 398 |
| | | 68 | அப்பெரும்பூதம் | | ... | 79 |
| | | 26 | ஆகமுதலன | | ... | 303 |
| | | 14 | ஐயந்தவிர்த்து | | ... | 213 |
| | | 67 | சத்துவகுணத்திற் | | ... | 79 |
| | | 139 | ஞானக்குமுந்துசவணு | | ... | 297 |
| | | 126 | பிரமமலநானென்கை | | ... | 184 |
| | | 93 | பிரமாநந்தமுறு | | ... | 398 |
| | | 48 | மிகுமரப்பன்மை | | ... | 100 |

கைவல்லிய நவநீத உதாரணச் செய்யுளின்
முதற்குறிப்பகராதி
முற்றிற்று.

---

## இந்நூலில் வந்துள்ள வசனவடிவ

### உதாரண நூற்பெய ரகராதியும், கைவல்லிய நவநீதப் பக்கமும்



---

## இந்நூலிற் பெயர்மாத்திரமாய் வந்துள்ள

### உதாரண நூற்பெய ரகராதியும், கைவல்லிய நவநீதப் பக்கமும்



---

உ

சிவமயம்

# கைவல்லிய நவநீதப்

# பிழைதிருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 3 | 3 | விக்கினகளும் | விக்கினங்களும் |
| 6 | 13 | ொழியாவா | ரொழியாவா |
| 7 | 14 | நியாயமத்தில் | நியாயமதத்தில் |
| 19 | 1 | பிரசங்கததில் | பிரசங்கத்தில் |
| 19 | 8 | உபாசிக்கதக்கன | உபாசிக்கத்தக்கன |
| 25 | 12 | புலத்தொழாவகை | புலத்தெழாவகை |
| 30 | 31 | எனறும் | என்றும் |
| 31 | 6 | மாகக்செய்ததை | மாகச்செய்ததை |
| 31 | 30 | உவமவாகுபெயரும், காரணக்குறியுமாய் நின்றமைகாண்க | உவமவாகுபெய ரென்னும் காரணக் குறியாயிற்று |
| 32 | 7 | துக்தத்திற் | துக்கத்திற் |
| 35 | 5 | பிரசங்கம் | (32) பிரசங்கம் |
| 38 | 14 | சட்கசபத்தி | சட்கசம்பத்தி |
| 41 | 3 | பிரசங்கம் | (35) பிரசங்கம் |
| 43 | 3 | பிரசங்கம் | (36) பிரசங்கம் |
| 45 | 9 | பிரசங்கம் | (37) பிரசங்கம் |
| 65 | 8 | இரச்சுவுமாம | இரச்சுவுமாம் |
| 67 | 22 | பாதமாமொ | பாதமாமோ |
| 68 | 27 | மெனபர் | மென்பர் |
| 70 | 6 | பரமாாத்த | பரமார்த்த |
| 70 | 21 | சமபந்த | சம்பந்த |
| 92 | 4 | மருவுஞ | மருவுஞ் |
| 114 | 5 | அநிாவசனீய | அநிர்வசனீய |



| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 140 | 30 | பரேரட்ச | பரோட்ச |
| 158 | 6 | பிரகாசிக்கிறதெ | பிரகாசிக்கிறதென் |
| 172 | 30 | அவித்தைபாற் | அவித்தையாற் |
| 248 | 17 | தனை யுணர்ந்தோர் | தமை யுணர்ந்தோர் |
| 280 | 31 | கர்மா | கர்ம |
| 320 | 22 | மாதவின் | மாதாவின் |
| 320 | 26 | அதீனங்களாம்= | அதீனங்களாம்— |
| 341 | 5 | பரமாணுவைப்போல | பரமாணுவைப்போல வும், பிரதானத்தைப் போலவும் |
| 367 | 1 | பிாகாச | பிரகாச |
| 370 | 17 | மார்கத்திற் | மார்க்கத்திற் |
| 375 | 4 | பிாகாசிப்பிக்கின்றது | பிரகாசிப்பிக்கின்றது |
| 381 | 26 | பிரீதிபுண்டாகிறதோ | பிரீதியுண்டாகிறதோ |
| 404 | 23 | பிாஜாபதி | பிரஜாபதி |
| 412 | 4 | துடக்குற்ற | தொடக்குற்ற |
| 412 | 5 | துடக்குற்ற | தொடக்குற்ற |
| 414 | 20 | உபாதானதர்மம் | உபபாதனதர்மம் |
| 428 | 12 | பொருபகற் | யொருபகற் |
| 449 | 10 | சீவன்முத்தியை யடைந்துள்ள | (அசம்சத்தி, பதார்த் தாபாவனே, துரிய மென்னும்) சீவன் முத்தியை யடைந் துள்ள |
| 452 | 5 | [illegible] | [illegible] |